

# பறவையினங்கள்

வண்ணக்கிளி



# பதிப்புரை

'பறவை இனங்கள்' என்ற வரிசையில் இது இரண்டாவது புத்தகம். அன்றாடம் சிறுவர்கள் பார்க்கின்ற பறவைகளைப்பற்றி தெரிந்து கொள்ள வேண்டிய விவரங்களையும், குறிப்புகளையும் சுவை படக் கூறுகிறது இந்நூல். இதனை இயற்றிய திருமதி அநுத்தமா அவர்களுக்கு எங்கள் நன்றி உரியது.

குழந்தைகள் தின வெளியீடாக வெளி வரும் இந்த நூலை, விரைவாகவும் அழகாகவும் அச்சிட்டுத் தந்த 'மெட்ரோ பாலிடன் அச்சகத்தாருக்கு' நன்றி.

இதனைத் தொடர்ந்து இந்த வரிசையிலுள்ள ஏனைய நூல்களும் அடுத்தடுத்து வெளிவரும் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள் கிறோம்.

**ந. பழனியப்பன்**
பதிப்பாளர்



# 1. வண்ணக்கிளி

அன்று ஞாயிற்றுக்கிழமை. சீனுவின் அப்பா வீட்டிலேயே இருந்தார். அத்தோடு அவரும், சீனு வின் அம்மாவுமாக வீடெல்லாம் ஒட்டடை அடித்து, பெருக்கி ஒழுங்கு படுத்துவதில் இறங்கி விட்டனர். சீனுவும் அவர்கள் கூடப்பிடித்து, படங்களைத் துடைத்து உதவி புரிந்தான். அந்த வேலையில் பெரி யவர்களுக்கு இருந்த ஊக்கம் அவனுக்கு இருக்க

வில்லை. மாமாவும் அவன் பெற்றோர்களுடன் சேர்ந்து கொண்டு புத்தகங்களைத் துடைத்துத் தட்டி அடுக்கு வதில் முனைந்தார்.

"சீனு, போதுமடா, கையைக் கழுவிக்கொண்டு பாடம் படிக்கப் போ" என்று உத்தரவிட்டார் அப்பா.

"அம்மா, என்ன டிபன்?" என்று மெதுவாக அம்மாவின் காதில் கேட்டான் மகன். ஞாயிற்றுக் கிழமை என்றால் தயிர்வடை, கேசரி ஏதாவது இருக்கும் என்று அவன் எதிர்பார்த்தான். ஆவலோடு நாக்கில் தண்ணீர் ஊற இருந்தவனை ஏமாற்றத்தில் ஆழ்த்தி விட்டாள் அம்மா.

"இன்றைக்கு இந்த வேலையெல்லாம் இருக்கிறதடா. அதனால் புளியஞ்சாதம் தான் கலந்து வைத்திருக்கிறேன். பித்தளை சம்புடத்தில் வறுத்த வற்றல் வைத்திருக்கிறேன். எடுத்துச் சாப்பிட்டு விட்டுப் படிக்கப் போ" என்றாள் தாய்.

சீனு உற்சாகமே யில்லாமல் "சாதமா!" என்று சப்பென்று கேட்டு விட்டுப் போனான்.

அப்பொழுதுதான் அவன் அப்பா கோபத்துடன் பேசுவது கேட்டது. "இது என்னது உன் டிராயரில் சலங்கை? நாட்டியம் ஆடப்போகிறாயா? செ! படிப்பு, வாசிப்பு இல்லை, பச்சைக் குழந்தை மாதிரி சலங்கையும் கண்ட குப்பையும் அள்ளிவைத்துக் கொள்கிறது. வேளை தவறாமல் 'என்ன சாப்பாடு?' என்று கேட்கத் தவறுவதில்லை. வர வர........"

அவனுடைய பயந்த முகத்தைப் பார்த்த மாமா சீனுவின் அருகில் வந்தார். "ஏதடா சலங்கை?'' என்று கேட்டார்.

"அது பெரிய கதை, மாமா. அப்பா எதிரே பேச பயமாக இருக்கிறது'' என்ருன் சீனு, ரகசிய மாக.

"வா, வாசலில் போய்ப் பேசுவோம்'' என்ருர் மாமா.

சீனு பயத்துடன் அப்பாவையும் அம்மாவையும் பார்த்தான். ஆனல் அப்பா, "மாமா கூப்பிடும்



போது போயேன்டா'' என்ருர், திடீரென்று. சீனு மாமாவை இழுக்காத குறையாக அழைத்துக் கொண்டு வாசல் பக்கம் ஓடினன்.

சலங்கைக் காக்காயைப் பார்த்ததிலிருந்து விவரமாகக்கூறினான் அவன். மாமா அவன் பேச்சை நம்பவேயில்லை.

"டேய் எனக்கா காது குத்தறே? பட்சியாவது உன்னோடு பேசுவதாவது? நல்ல கற்பனையடா உனக்கு! பேஷ், பேஷ்!" என்று கை கொட்டிச் சிரித்தார் மாமா.

"நீங்கள் நம்பாவிட்டால் நான் என்ன செய்வது? இந்தச் சலங்கை என்னிடம் எப்படி வரும்? நீங்களே அம்மாவைக் கேட்டுப் பாருங்கள். நான் இன்றைக்குக் காலையில் தோப்புக்குப் போனேனா இல்லையா என்று."

"காக்காய்க் கால் சலங்கையை நீ அவிழ்த்திருக்கலாம். உன்னைப் போல வாண்டு தானே கட்டி விட்டிருக்கிறது? அதை நம்புகிறேன். நீ தோப்புக்குப் போய் மயிலைப் பார்த்ததையும் நம்பலாம், ஆனால்......"

"என்ன சொல்லுங்கள்."

"பேசிற்று, பேசிற்று' என்று சரடு விடுகிறாயே, நான் நம்ப மாட்டேன்" என்றார் மாமா முடிவாக.

சீனுவின் முகம் தொங்கி விட்டது.

மாமா அவனைத் தழுவிக் கொண்டு சமாதானப் படுத்தினார். "கிடக்கிறதடா. உண்மையாகவே பேசுகிற பட்சி ஒன்றை உனக்குப் பரிசாக அளிக்கிறேன், கவலைப் படாதே" என்று அவனைத் தேற்றி விட்டு மீண்டும் புத்தகம் அடுக்கும் வேலைகளுக்குப் போய் விட்டார் அவர்.

அடுத்தபடி சலங்கைக் காக்காய் வந்தால் மாமாவுக்கு அறிமுகப் படுத்த வேண்டும் என்று தீவிரமாக யோசித்தான் சீனு. ஆனல் அவரிடம் அந்த விஷயத்தைப் பற்றிப் பேசவில்லை. காரியத்தில்தான் காட்டவேண்டும் என்பது அவன் துணிவு.

அன்று மாலை மாமா வெளியே போன போது அவனை அழைத்தார். அவன் கூடப்போக மறுத்து விட்டான்.

"ரோஸ் மில்க் வாங்கித் தருகிறேனடா'' என்று ஆசை காட்டினர் அவர்.

"இல்லை, மாமா. எனக்கு நிறைய எழுத்து வேலை இருக்கிறது. தவிர, சரித்திரம் வேறு படிக்க வேண்டும்'' என்ருன் சீனு.

உண்மையிலேயே அவனுக்கு நிறைய எழுத்து வேலை இருக்கத்தான் இருந்தது. தவிர, சலங்கைக் காக்காயைப் பார்த்து ஒரு பேச்சுச் சொல்லவேண்டும், மாமாவின் அவநம்பிக்கையை எடுத்துச் சொல்லி ஒரு குரல் அழவேண்டும் என்று வழிபார்த்துக் கொண்டிருந்தான் அவன்.

அவன் தான் பாடத்தில் லயித்து விட்டானே, அல்லது சலங்கைக் காக்காய் அன்று வரவில்லையோ தெரியவில்லை. நன்ருக இருட்டி விட்டது. அரசமரத்திலும் எல்லாம் நிசப்தமாகிவிட்டது. சீனு தோட்டப் பக்கம் போய் அரசமரத்தை உற்றுப் பார்த்தானே தவிர ஒன்றும் புலப்படவுமில்லை, அங்கு அசைவுமில்லை. அவன் மீண்டும் தன்னிடத்திற்கே வந்து விட்டான்.

அவன் சாப்பிட்டு விட்டுச் சீக்கிரமே தூங்கி விட்டான். காலையில் அவன் விழித்துக் கொண்ட போது சூரியன் கிளம்பி வெகு நேரமாகிவிட்டது. அரச மரத்தில் ஒரு காக்கை கூட இல்லை.

"டேய், தூங்குமுஞ்சி. உனக்கு நான் என்ன வாங்கி வந்திருக்கிறேன் பார்த்தாயா? ராத்திரியே எழுப்பினேன், எழுந்திருக்கவில்லை. இன்னும் அரை மணியில் நான் ஊருக்குப் போகப் போகிறேன். நீ தூங்குமுஞ்சி மாதிரி தூங்குகிறாயே?" என்றார் மாமா.



சீனு அவசர அவசரமாக எழுந்து பல்துலக்கி திருநீறிட்டு, பூஜை யடியில் தொழுது விட்டுக்காபிகுடித்தான். அவன் மாமா கையில் ஒரு கூண்டுடன் அங்கு வந்தார். அதற்குள் எழில் வாய்ந்த கிளி ஒன்று குறுக்குக் கழியில் உட்கார்ந்திருந்தது. சீனு, ஆவலுடன் அதை வாங்கிக் கொண்டான். அவன் மாமா அதை ஒரு கம்பியில் தொங்க விட்டுக் காட்டினார்.

"கொஞ்சமாகப் பருப்புச் சாதம் போடு. பழங்கள் கொடு. எப்படிப் பேசும் பார்! எதையோ கனவு காண்கிறாயே?" என்றார் மாமா.

"சலங்கைக் காக்கையை நேரில் பார்த்தால் சொல்ல மாட்டீர்கள்." என்ருன் சீனு.

"சரி தானடா சலங்கைக் காக்காவாம்?" என்று கூறிவிட்டு "ஓ" வென்று சிரித்தார் மாமா.

சீனு தன் வருத்தத்தை வெளிக் காட்டிக் கொள்ளவில்லை. மாமாவை ஊருக்குப் போக வழி அனுப்பினான். போகும் போது வண்டியிலிருந்து கூட அவன் மாமா "சீனு, கிளிக்குப் பேச்சுச் சொல்லிக் கொடு. நிஜமாகவே பேசும்" என்ருர்.

சீனுவும் சிரித்து வைத்தான். அவன் கிளியைப் போய்ப் பார்த்தான். அது மிகவும் அழகாகத்தான் இருந்தது. சீனுவைப் பார்த்ததும் "என்ன விலை? என்ன விலை?" என்றது.

"விலையுமாச்சு தலையுமாச்சு! 'நமஸ்தே' என்று சொல்" என்று கற்றுக் கொடுத்தான் சீனு.

நான்கைந்து தடவை "நமஸ்தே, நமஸ்தே' என்று சொல்லிக் கொடுத்த பிறகு கிளியும் கற்றுக் கொண்டு விட்டது.

சில நாட்கள்வரை அவனுக்குப் பொழுது போக்காக இருந்தது. ஆனல் நான்கு, ஐந்து நாட்களான பிறகு அவனுக்கு மிகவும் சலிப்பாகிவிட்டது. சொன்னதையே சொல்லிக்கொண்டு இருப்பதைக் கேட்க அலுத்து விட்டது. ஆயினும் அதற்குப் போட வேண்டிய ஆகாரத்தை மட்டும் வஞ்சனையில்லாமல் போட்டு விட்டு அப்பால் போய் விட்டான். அவனுடைய அப்பாவுக்கும், அம்மாவுக்குமோ அந்தக் கிளி

மீது மிகவும் பிரியமாகிவிட்டது. யார் வந்தாலும் அவர்களிடம் அவ்விருவரும் இந்தக் கிளியின் பேச்சே பேசினார்கள்.

சீனு மாலை வேளையானதும் சிமெண்டு பெஞ்சியில் போய் அமர்ந்து கொண்டான். அவன் அம்மா அன்று சுண்டல் செய்திருந்தாள் டிபனுக்கு. அதனால் தொன்னையைக் கையில் ஏந்தியபடி கொரித்துக் கொண்டே அவன் தோட்டத்தில் உட்கார்ந்திருந்தான். "சலங்கை எங்கு போயிற்றோ தெரியவில்லையே? அதற்குச் சுண்டல் கொடுக்கலாம்'' என்று நினைத்தான் சீனு.



நினைத்த மாத்திரத்தில் சொல்லி வைத்தாற் போல் சலங்கைக் காகம் அங்கு வந்து அருகில் அமர்ந்து கொண்டது. சீனு ஒரு கை சுண்டலை எடுத்து அதற்குப் போட்டான். சில விநாடிகள் இருவரும் தின்பதிலேயே முனைந்து விட்டனர். அதன் பிறகு தான் அவன் மிகுந்த சுண்டலையும்

சலங்கைக்கே போட்டு விட்டு, தன் கையை ஓர் இலைச்சருகில் துடைத்துக் கொண்டு கழுவிக்கொள் ளப் போய் விட்டான். சலங்கை கூடவே வந்தது. "சீனு, உன்னை நான் இரண்டு நாட்களாகப் பார்க் கவே யில்லையே?" என்றது.

"என்னை மறந்து விட்டாயாக்கும் என்று நினைத் தேன்" என்றான் சீனு.

"உங்கள் வீட்டில் ஒருகூண்டு தொங்குகிறதே?" என்று கேட்டது அது.

"அதுவா அதுதான் என் மாமா வாங்கித் தந்த கிளி. அது சுத்த மக்குக் கிளியாக இருக்கிறது; சொன்னதைச் சொல்கிறது. அவ்வளவு தான்" என்றான் சீனு அலுப்பாக.

"உனக்கு அத்துடன் பேசத் தெரியவில்லை. நான் வந்து சரிப்படுத்துகிறேன் பார்" என்றது சலங்கை.

"ஐயோ, அது மக்கு!" என்றான் சீனு. அப் பொழுது கொய்யா மரத்தில் பச்சைக்கிளி ஒன்று வந்து அமர்ந்து விட்டு, சீனுவைப் பார்த்து விட்டுப் பறந்து ஓடி விட்டது.

"இந்தக் கிளியைப் பார், சலங்கை, எவ்வளவு அழகாக இருக்கிறது!" என்றான் சீனு.

"இந்தக் கிளியை வேண்டுமானால் உன்னுடன் பேசச் சொல்கிறேன்."

"யாரும் என்னுடன் பேச வேண்டாம். பேசினா லும் என் மாமா நம்பப் போகிறதில்லை. உன்னை

மீது மிகவும் பிரியமாகிவிட்டது. யார் வந்தாலும் அவர்களிடம் அவ்விருவரும் இந்தக் கிளியின் பேச்சே பேசினர்கள்.

சீனு மாலை வேளையானதும் சிமெண்டு பெஞ்சியில் போய் அமர்ந்து கொண்டான். அவன் அம்மா அன்று சுண்டல் செய்திருந்தாள் டிபனுக்கு. அதனை தொன்னையைக் கையில் ஏந்தியபடி கொறித்துக் கொண்டே அவன் தோட்டத்தில் உட்கார்ந்திருந்தான். "சலங்கை எங்கு போயிற்றோ தெரியவில்லையே? அதற்குச் சுண்டல் கொடுக்கலாம்" என்று நினைத்தான் சீனு.



நினைத்த மாத்திரத்தில் சொல்லி வைத்தாற் போல் சலங்கைக் காகம் அங்கு வந்து அருகில் அமர்ந்து கொண்டது. சீனு ஒரு கை சுண்டலை எடுத்து அதற்குப் போட்டான். சில விநாடிகள் இருவரும் தின்பதிலேயே முனைந்து விட்டனர். அதன் பிறகு தான் அவன் மிகுந்த சுண்டலையும்

சலங்கைக்கே போட்டு விட்டு, தன் கையை ஓர் இலைச்சருகில் துடைத்துக் கொண்டு கழுவிக்கொள்ளப் போய் விட்டான். சலங்கை கூடவே வந்தது. "சீனு, உன்னை நான் இரண்டு நாட்களாகப் பார்க்கவே யில்லையே?" என்றது.

"என்னை மறந்து விட்டாயாக்கும் என்று நினைத்தேன்" என்றான் சீனு.

"உங்கள் வீட்டில் ஒருகூண்டு தொங்குகிறதே?" என்று கேட்டது அது.

"அதுவா அதுதான் என் மாமா வாங்கித் தந்த கிளி. அது சுத்த மக்குக் கிளியாக இருக்கிறது; சொன்னதைச் சொல்கிறது. அவ்வளவு தான்" என்றான் சீனு அலுப்பாக.

"உனக்கு அத்துடன் பேசத் தெரியவில்லை. நான் வந்து சரிப்படுத்துகிறேன் பார்" என்றது சலங்கை.

"ஐயோ, அது மக்கு!" என்றான் சீனு. அப்பொழுது கொய்யா மரத்தில் பச்சைக்கிளி ஒன்று வந்து அமர்ந்து விட்டு, சீனுவைப் பார்த்து விட்டுப் பறந்து ஓடி விட்டது.

"இந்தக் கிளியைப் பார், சலங்கை, எவ்வளவு அழகாக இருக்கிறது!" என்றான் சீனு.

"இந்தக் கிளியை வேண்டுமானால் உன்னுடன் பேசச் சொல்கிறேன்."

"யாரும் என்னுடன் பேச வேண்டாம். பேசினாலும் என் மாமா நம்பப் போகிறதில்லை. உன்னை

அழைத்து அவரிடம் காட்டலாம் என்று நினைத்தேன். நீயும் தலையே காட்டாமல் சதி செய்து விட்டாய்!'' என்று சீனு மிகவும் குறைப்பட்டுக் கொண்டான்.

"அவர்கள் நம்பாவிட்டால் நமக் கென்ன? நாம் எப்பொழுதும் போல் சிநேகமாக இருந்து விட்டுப் போகிறோம்'' என்றது காகம்.

அதுவும் சரிதான் என்று நினைத்தான் அவன். அதன் பிறகு காகம் அன்று தான் பார்த்த சில ருசிகரமான விஷயங்களைச் சொல்லிற்று. இவர்கள் சூழ்நிலை மறந்து பேசிக் கொண்டிருந்ததைக் கண்டு, மெதுவாகக் கிளி கொய்யா மரத்துக் கிளையில் பிடித்துக் கொண்டு மெதுவாக அடி மீது அடிவைத்து,பக்க வட்டத்தில் நடந்து ஒரு நல்ல பழத்தை அணுகிக் கொண்டிருந்தது. காகம் அதைக் கவனித்து சட்டென்று பறந்து கிளி பக்கமாக "காகா'' என்று என்ன சொல்லிற்றோ தெரியவில்லை, கிளி வில்லினின்று விடப் பட்ட அம்பு போல ஒரே எட்டாகச் சீனுவிடம் வந்து, அருகில் இருந்த ஒரு கிளையைக்கெட்டியாகத் தன் கால்களால் வளைத்துப் பிடித்துக்கொண்டது.



சீனு அதைக் கண்டதுமே பேசினன். "நீ மிக மிக அழகாக இருக்கிருயே?"

கிளி மகிழ்ச்சியுடன் ஒரு முறை குலுக்கிக் கொண்டது. "நீயும் தான் அழகாக இருக்கிருய் உனக்கு கொய்யாப் பழம் பிடிக்குமா?" என்று கேட்டது கிளி.

"கொய்யாப் பழம் பிடிக்காமல் இருக்குமா?" என்ருன் சீனு.

உடனே ஜிவ்வென்று கிளம்பிவிட்டது கிளி. மூக்கில் நல்ல பழுத்த பழமாக ஒன்று கொண்டு வந்து கொடுத்தது. அதைக் கடித்துக் கொண்டே சீனு அத்துடன் பேசினன்.

கிளி அவன் பக்கத்தில் இருந்தது. சீனு அதை ஆசையுடன் தடவிக்கொடுத்தான். அவன் கைமுழத் தால் ஒரு முழம் தூரத்தில் இருந்தது அந்தக் கிளி. நல்ல பச்சை, சில இடங்களில் முதுகிலும் தலையின் பக்க வாட்டிலும் நீல நிறம் பனி மூடியது போல சில சமயம் தென்பட்டது. கழுத்தைச் சுற்றி ரோஸ் நிறப் பட்டை ஒன்று லேசாக இருந்தது. அதன் முகத் திற்கு கீழே இருக்கவில்லை அந்தப் பட்டை. அதற் குள் கருமையான பட்டை ஒன்று தெரிந்தது. மூக்கு நுனியிலிருந்து கண் வரை சிறு கருப்புக் கோடு இழுக்கப்பட்டிருந்தது. அதன் விழி இளம் மஞ்சள். அதன்வாலுக்குக் கீழே கூட லேசான மஞ்சள். சாயல் அடித்தது. மூக்கு தான் அழகிய பழம் போன்ற சிகப்பு. வளைந்து மிகவும் அழகாகத் தெரிந் தது. கால்கள் ஒருவிதமான பலப்ப நிறம்.

வெற்றிலை பாக்குப் போட்டுக் கொண்டு கழுத்தில் மணி மாலையுடன் கூடிய ஒரு பெண்ணைப் போல இருந்தது கிளி. சீனு அதன் முதுகைத் தடவிக் கொடுத்து விட்டுப் பேசினான்.

"கிளி, நான் உன்னைச் 'சுந்தரி' என்று தான் கூப்பிடப் போகிறேன்'' என்றான் சீனு.

"ஐய, நான் பெண் பிள்ளையா?'' என்று வெகுண்டு எழுந்தது கிளி.

"பின்னே?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான் சீனு.

"என் கழுத்தைப் பார். இந்த ரோஸ் கலர் கழுத்துப் பட்டை ஆண் பிள்ளைகளுக்குத்தான் உண்டு. பெண்களுக்குப் பச்சையிலேயே ஒரு ஆழ்ந்த நிறத்தில் இருக்கும். அது கண்ணுக்குக் கூடப் புலப்படாது'' என்றது அது.

"எங்களில் பெண்கள் தாம் அழகு, அழகாக டிரெஸ் செய்து கொள்வார்கள்'' என்றான் சீனு.

"பட்சி வர்க்கத்தில் ஆண்கள் தாம் அழகாக இருப்போம். இல்லையோ இருவரும் ஒரே மாதிரி இருந்து விடுவோம்'' என்றது கிளி.

"உங்கள் ஜாதியினர் எந்த எந்த தேசத்தில் இருக்கிறார்கள்?'' என்று கேட்டான் சீனு.

''நாங்கள் அநேகமாகச் சம பூமியில்தான் இருப்பது. கும்பல் கும்பலாகத் தான் வாழ்வோம். சில பேர் நீலகிரி மலையிலும், மேற்குத் தொடர்ச்சி மலைகளிலும் இருக்கிறார்களாம். அவர்கள் நிறமே வேறு.''

"அவர்கள் கிடக்கிறுர்கள். எனக்கு உன் நிறம் தான் பிடித்து இருக்கிறது" என்ருன் சீனு.

"உனக்குக் கல்யாண மாகி விட்டதா?" என்று கேட்டான் சீனு.

"இன்னும் இல்லே. இப்பொழுதுதான் கல்யாண காலம் ஆரம்பித்து இருக்கிறது. மணமாகி விட்டால் நாங்கள் தனிக் குடித்தனமாக, ஜோடி ஜோடியாக இருப்போம். மற்ற நாட்களில் கூட்டம் கூட்டமாக இருப்போம்."

"ஆமாம் அப்பொழுது நீங்கள், வயல், தோட் டம் எல்லாம் நாசம் செய்து விடுவீர்கள்."

"ஆமாம்" என்று சிரித்தது கிளி.



சலங்கை வருவது தெரிந்து சீனு திரும்பினுன். அதற்குள் அந்தக் கிளி காதைப் பிளக்கும் ஒரு கீரீச்சுடன் பறந்தோடி விட்டது.

"சீனு, இருட்டி விடுமே? நீ உள்ளே போக வில்லேயா? உன் அம்மா தேடுவாளே?" என்று நினேவு மூட்டியது காகம்.

சீனு 'ஆமாம்' என்று ஒத்துக் கொண்டு, தன் வீட்டிற்குள் போக இசைந்தான். சலங்கைக் காகம்

தன் கூட்டத்துடன் சேர்ந்து மறையும் வரை நின்று விட்டு அவன் வீட்டினுள் வந்துவிட்டான். கூண்டுக் கிளி அவனைக் கண்டதும் "நமஸ்தே, சீனு" என்றது. சீனு காதைப் பொத்திக் கொண்டே உள்ளே ஓடி விட்டான்.

அதன் பிறகு அவன் வெளியே வரவேயில்லை. பாடம் படித்துக் கொண்டே இருந்தான். சாப்பிட்ட வுடன் படுத்து உறங்கி விட்டான்.

காலையில் எழுந்ததும் நேரே கொய்யா மரத் தடிக்குப் போனான் சீனு. சூரியனுடைய பொற் கிரணங்கள் அம் மரத்தின் மீது வெளிச்சத்தை பொழிந்து கொண்டிருந்தன. சீனு மஞ்சள் நிறமான கொய்யா ஏதேனும் இருக்குமோ என்று தேட லானான். நல்ல தேர்ந்த பழமாகப் பார்த்து அவன் பறிக்கப்போன சமயம் தான் ஒரு கிளி அங்கு இருப் பதைக் கண்டான். அது முதல் நாள் கண்ட கிளி தானா என்று அவனுக்குத் தெரியவில்லை. ஆனால் அதுவே முந்திக் கொண்டு பேசியது.

"சீனுவா? என்று கேட்டது அது சாவதான மாக.

"ஆமாம், கொய்யாப் பழம் பறிக்க ஏறினேன்" என்றான் சீனு.

"மேல் கிளையில் ஒரு பேஷான பழம் இருக் கிறது பார்" என்று அவனுக்குச் சொல்லிவிட்டு அது ஒரு காலால் கிளையில் பிடித்தபடி உட்கார்ந்து கொண்டு மறுகையினால் பழத்தை வாயிடம் எடுத் துச் சென்று வெகு நேர்த்தியாகத் தின்றது. அப்

பொழுது தான் அதன் கால் விசித்திரத்தைக் கவனித்தான் சீனு. நான்கு விரல்களில் இரண்டு முன் பக்கமும் இரண்டு பின்புறமுமாக வளைந்து எதுஒன்றையும் கெட்டியாகப் பிடிக்க ஏதுவாக இருந்தது.



சீனு கீழே இறங்கி விட்டான். தான் கொய்த கொய்யா இரண்டையும் தன் நிஜார்ப் பையில் போட்டுக் கொள்ள கையை விட்டபோது அதில் கொஞ்சம் அரிசிப் பொரி இருப்பதைக் கண்டு அதை எடுத்து மண் தரையில் போட்டான். பிறகு இரண்டு பழங்களையும் பையில்வைத்து விட்டுஒன்றைக் கொரிக்க ஆரம்பித்தான்.

கிளி அதற்குள் தரையில் இறங்கிப் பொரியைப் பொருக்க ஆரம்பித்தது. அப்பொழுது கிளியின் கூர்மையான நீள வாலும் வளைந்த காலும் அதன் நடை அழகைக் கெடுத்தன. அது விசித்திரமாக அசைந்து அசைந்து பக்க வாட்டில் நடை பயின்றபோது சீனுவுக்குச் சிரிப்பு வந்தது.

"உன் கூடு எங்கே? என்று கேட்டான்சீனு.

"எங்கே ஒரு ஓட்டை கிடைத்தாலும் அதில் முட்டையிட்டு வைப்பதுதான். எப்பொழுதாவது மரத்தில் மூக்கினால் குத்திக் குத்தி ஓட்டை செய்து கொள்வோம்."

"இரவு எங்கே உறங்குவீர்கள்?"

"மரத்தின் மீதுதான். காக்காய்கள், மைனாக் கள், நாங்கள் எல்லாம் ஒரே மரத்தில் கூட இரவு தங்குவோம். காக்காய்கள் மாதிரிதான். மாலை நேரத்தில் நாங்கள் கூட்டம் கூட்டமாகப் பறப்பதை நீ பார்த்த தில்லையா?" என்று கேட்டது கிளி.

"பட்சிகளையே நான் இப்பொழுதுதான் கவ னிக்கின்றேன்." என்றான் சீனு, சற்று சங்கோஜத் துடன்.

"நாங்கள் மனிதர்களைக் கவனித்துக் கொண் டிருக்கிறோமா? எங்களைப் பிடிக்க வந்தால்தான் கவனிக்கிறோம்." என்றது கிளி.

"உனக்குக் கல்யாண மாகவில்லை என்கிறாயே? முட்டைகளைப் பார்க்கவேண்டும் என்று நினைத் தேன்" என்றான் சீனு.

"அந்த வேப்ப மரத்தில் போய்ப் பார். ஒரு கிளி இட்டு வைத்திருக்கிறது. வெள்ளை வெளேரென்று இருக்கும். ஒரு பொட்டு, புள்ளி ஒன்றும் இராது. சுமார் ஆறு முட்டைகள் இருக்கும்."

சீனு அது சொன்ன இடத்திற்குப் போய்ப் பார்த்தான். சுமார் ஒரு அங்குலம் ஒன்றரை அங் குலம் தான் இருந்தன ஒவ்வொரு முட்டையும்.

சீனு அக் கிளியுடன் சில விநாடிகள் இருந்து விட்டு வீடு வந்தான். நேரே மாமா அளித்த கிளியிடம் போய்ப் பார்த்தான். அதன் கழுத்தில் ரோஸ் நிறப் பட்டையில்லை. பச்சைப் பட்டைதான் இருந்தது.

"நீ பெண்ணா?"

"நான் எதுவானால் உனக்கென்ன? உனக்குத்தான் என்னைக் கண்டால் பிடிக்கவில்லையே?'' என்று கண்ணீர் ஒலிக்கக் கூறியது அது.

சீனுவுக்கு நெஞ்சு சுருக்கென்றது. ஆயினும் அவன் அப்பொழுது ஒன்றும் சொல்லாமல் தலை குனிந்து கொண்டான். இந்தக் கிளியும் சலங்கைக் காக்காயைப் போல ஒரு தோழப் பட்சிதானே? சலங்கையாவது நாலு இடத்துக்கு ஓடுகிறது. இந்தக் கிளி எங்கே போகும்? நாமே அதை அடைத்து விட்டு நாமே வெறுப்பு காட்டலாமா? சீனு தன் சுபாவத்திற்காக வருந்தினான். கொண்டு வந்திருந்த ஒரு கொய்யாப் பழத்தை அந்தக் கிளியினிடம் கொடுத்துவிட்டு அதன் பக்கத்திலேயே நின்றான். கிளி அந்தப் பழத்தைத் தொடவேயில்லை. தொங்கப்போட்ட தலையையும் நிமிர்த்தவில்லை. சீனு அதன் அருகே போய் கொஞ்சும் குரலில் பேசினான்.

"கிளி நீ கோபித்துக் கொள்ளாதே, நீ இந்த மாதிரிப் பேசுவாய் என்று எனக்குத் தெரியாதே? நீ நான் சொன்னதையே சொல்லவே எனக்கு 'போர்' அடித்தது'' என்றான்.

"மனிதர்களான நீங்கள் அதைத்தானே எங்கவிடம் எதிர் பார்க்கிறீர்கள்?"

"நீ சொல்வதும் உண்மைதான், ஆனால் நீ என்னுடன் இன்று போல் பேசியிருந்தாலும்......"

"உனக்கு என்மீது கோபமில்லையே? மாமா உனக்காக என்னை அழைத்து வந்தார். நீ என்னிடம் அன்பாக இல்லா விட்டால் எனக்கு எப்படி இருக்கும்?"

"நிஜம்தான். நான் இனிமேல் அப்படி இருக்க மாட்டேன். நீ என்னோடு பேசிக் கொண்டு இரு."

"உனக்கு என்னைப் பிடிக்குமா?" என்று குத்தலாகப் பேசியது கிளி.

"நான் இன்றைக்கு ஒரு கிளியிடம் தான் பேசிக் கொண்டிருந்தேன். அது எவ்வளவு அழகாக இருந்தது தெரியுமா?"

"நானும் தான் காட்டில் இருந்த போது அழகாகத்தான் இருந்தேன். நடமாட இடமில்லாமல், சூரிய ஒளியும், சோலையின் சூழ் நிலையும் இல்லாமல் இருந்தால் என்ன அழகு இருக்க முடியும்?"

"அடைந்து கிடப்பதனால்தான் என்கிறாயா?"

"கட்டாயம்" என்று உறுதியாகக் கூறியது கிளி.

"நான் அந்தக் கிளியை இங்கு அழைத்து வருகிறேன் பார்" என்றான் சீனு.

"ஒன்றும் வேண்டாம். சுதந்திரமாகத் திரியும் அது என்னைக் கேலி செய்ய வேண்டுமா?"

சீனு அதனை ஆறுதல் படுத்திப் பேசிக்கொண்டிருந்து விட்டு தன் வேலைகளைக் கவனிக்கப்போய் விட்டான்.

அன்று மாலை பள்ளிக்கூடத்திலிருந்து வந்ததும் சீனு கிளியுடன் சிறிது பேசிவிட்டு உள்ளே போனான். அவன் டிபன் சாப்பிட்டு விட்டு கை கழுவப் பின் பக்கம் போனபோது கிணற்றின் தூண் மீது சோலைக்கிளி வந்து அமர்ந்து கொண்டது. சீனு அதைக் கண்டு மகிழ்ச்சியுடன் புன்முறுவல் பூத்தான்.

"சீனு, என்ன சாப்பிட்டாய்?" என்று கேட்டது கிளி.

"வடையும் அப்பமும்" என்றான் சீனு." உனக்கு அவை பிடிக்குமா?" என்று அதைக் கேட்டான்.

"பிடிக்காமல் என்ன? ஆனால் உங்கள் வீட்டில் ஒரு கிளி இருக்கிறதே?—அதைப் பார்க்கலாம் என்று வந்தேன்" என்றது அது.

"வாயேன் அதற்கும் ஒரு சிநேகம் கிடைத்த மாதிரி யிருக்கும்" என்று சீனு கூறிவிட்டு உள்ளே சென்றான்.

அவன் மறுபடியும் கையில் இரண்டு அப்பங்களுடன் வந்தபோது கொல்லைப் புறத்தில் சோலைக் கிளி இருக்கவில்லை. அவன் வாசல் புறம் சென்றான். அவன் கண்ட காட்சி மிக மிக ரம்மியமாக இருந்தது.

சோலைக்கிளி தன் இரு கால்களையும் கூண்டின் சிறு கம்பிகளின் மத்தியில் விட்டு நின்று, மூக்கை உள்ளே செலுத்தி என்னவோ பேசிற்று. கூண்டுக் கிளியும்குறுக்குக் கம்பியை விட்டு இறங்கி வந்து, வந்த கிளியிடம் உறவு கொண்டாடியது. 'உள்ளே வந்து இருக்கலாம்! கதவு திறக்க அனுமதி யில்லையே?' என்று ஒன்றுக்கு ஒன்று பேசியது போல இருந்தது. என்னவோ பேசிக் கொண்டன அவையிரண்டும். ஆனால் கூண்டின் கம்பிகள் அவைகளைப் பிரித்தன. சீனுவுக்கு அந்த சிநேக காட்சியைத் தன் அம்மா பார்க்கவேண்டும் என்று தோன்றிவிட்டது. உள்ளே சென்று தன் தாயாரை அழைத்து வந்தான். அவன் அம்மாவும் ஆச்சரியத்துடனும் ஆசையுடனும் அவ்விரண்டையும் பார்த்தாள்.



"வெளியிலிருக்கிறதே—அந்தக் கிளி ஆண், அம்மா. நம்முடையது பெண்!" என்றான் சீனு.

"உனக்கு எப்படித் தெரியுமாம்?" என்ருள் தாய். "எனக்கு எல்லாம் தெரியும், அம்மா! நீ யாரை வேண்டுமாஞலும் கேட்டுப் பாரேன். அந்தக் கிளி சோலையில் இருப்பதனுல்தான் அது அவ்வளவு பசுமையும் செழிப்புமாக இருக்கிறது. நம்முடையது பார். ஏழை மாதிரி இருக்கிறது" என்று விளக்கினன் சீனு.

"டேய், நான் கூண்டைத் திறந்து விட்டு விடுகிறேனடா. பாவம், இரண்டும் எப்படித் தவிக்கிறது!" என்ருள் தாய்.

"வேண்டாம், அம்மா எங்காவது பறந்து போய் விட்டால் அப்பா கோபித்துக் கொள்வாரே? மாமா வேறு வருத்தப் படுவார். அவர் அளித்த பரிசு இது", என்ருன் சீனு. அவன் வரையில் அவைகளை ஒன்று சேர விடத்தான் இஷ்டம். ஆயினும் அவன் பயப்பட்டான்.

அவன் தகப்பனர் வந்ததும் சீனுவின் தாயார் கிளிகள் விஷயம் பிரஸ்தாபித்தாள். அவன் அப்பாவும் அதை மறுக்காமல் ஆமோதித்தது சீனுவுக்கும் மிகவும் மகிழ்ச்சியாக இருந்தது.

மறுநாள் காலையில் எழுந்ததும் சீனு வழக்கம் போல காபி சாப்பிட சமையலறைக்குச் சென்ற போது அவன் அம்மா சேமியா பாயசம் போட்டுக் கொண்டிருப்பது தெரிந்தது. அவன் நாக்கில் நீர்

சுரந்தது. "எதற்கம்மா இப்பொழுது பாயசம்?" என்று கேட்டான் அவன்.

"உன் குண்டு தொப்பைக்குத் தான்" என்ருள் தாய், சிரித்துக் கொண்டே.

"போ, அம்மா!" என்று கோபித்துக் கொண்டான் சீனு.

"இல்லையடா, நம் கிளியை இன்று விடுவித்து விடப் போகிரேம். அதற்கும் சோலைக் கிளிக்கும் கல்யாணமாம். அப்பா பாயசம் வைக்கச் சொன்ஞர்" என்ருள் தாய், விவரமாக.

சீனுவின் உடலெல்லாம் இனிப்பு பாய்ந்தது. உடனே ஓடிப்போய் மெள்ள முள் வேலியைத் தாண்டி அடுத்த வீட்டுத் தோப்பிலிருந்து பழுத்த மாம்பழம் ஒன்றைப் பறித்துக்கொண்டு வந்தான்.

சோலைக் கிளி சொல்லி வைத்தாற்போல் வந்து சேர்ந்தது.

அம்மா ரேடியோவை வைத்ததும் நாதசுரம் கேட்க ஆரம்பித்தது. அப்பா கூண்டின் கதவைத் திறந்து விட்டார். அம்மா தரையில் இரண்டு சிறு கோலங்களில் நடுவில் பாயசத்தை ஊற்றினுள்.

சோலைக்கிளியும் கூண்டுக்கிளியும் பறந்து ஆகாயத்தில் மறைந்து விடும் என்றுதான் சீனு எதிர் பார்த்தான். ஆனல் அவை இரண்டும் அப்படியெல்லாம் செய்யாமல் பாயசத்தை பொருக்கிச் சாப்பிட்டன.

அப்பாவும் அம்மாவும் உள்ளே போய் விட்டார்கள். சீனு அவைகள் எதிரே மாம்பழத்தை வைத்தான். கிளிகள் அதைச் சிறிது கொத்தின. பிறகு சோலைக்கிளி கூண்டுக்கிளியின் தலையைத் தன் மூக்கினல் வருடிக் கொடுத்துக் கொண்டே என்னவோ முணமுணப்பதுபோல் கொஞ்சுதல் மொழிகள் பேசலாயிற்று. இருகிளிகளும் மூக்கோடு மூக்கு வைத்து உறவாடின.

"ஏய், கிளிகளா! நீங்கள் இரண்டுபேரும் ஆனந்தமாகச் சோலைக்கு ஓடி விடுவீர்கள். இந்தச் சீனுவை நினைவிலிருக்குமா?" என்று கேட்டான் சீனு.

அவை இரண்டும் சந்தோஷமாக இருப்பதைக் காண தெம்பாக இருப்பினும், தன்னை மறந்து விடுமோ என்று நினைக்கையில் சற்று ஏக்கமாக இருந்தது அவனுக்கு.

"உனக்குப் பயித்தியமா? நாங்கள் உங்கள் யாரையும் மறக்க மாட்டோம். தினமும் அரசமரத்துக்கே எங்கள் கூட்டத்துடன் வந்து விடுவோம் பார்" என்றது சோலை.

"எனக்குச் சுதந்திரமும் வாழ்வும் அளித்த உன்னை மறப்பேனு சீனு" என்றது கூண்டுக்கிளி.

பிறகு இரண்டும் ஒன்ருகப் பறந்து சோலைக்குள் மறைந்தன.



## ௨ மிடுக்கு மைனா

மணி ஒலித்ததைக் கேட்டு விழித்துக் கொண்டான் சீனு. முதல் நாள் பொங்கல் திருநாள். சர்க்கரைப் பொங்கலும் வடையும் அதிகமாகத் தின்றுவிட்டபடியால் அவன் வயிறு ஒரு தினுசாக வலித்தது. அவன் எழுந்திருக்கும் போதே வயிற்றைத் தடவிக்கொண்டே எழுந்து வந்து கொல்லைப்புறத்தில் நின்று சோம்பல் முறித்துக் கொண்டான். அங்கே அவன் தாயார் வெளியில் திறந்த முற்றத்தின் நடுவில் பளிச்சென்று கோலம் போட்டு அழ

"இனி சின்ன மாமாவும், புது மாமியும், இப்படித்தானே இருப்பார்கள்!" என்று எண்ணினன் சீனு.



★



# உ மிடுக்கு மைனு

மணி ஒலித்ததைக் கேட்டு விழித்துக் கொண்டான் சீனு. முதல் நாள் பொங்கல் திருநாள். சர்க்கரைப் பொங்கலும் வடையும் அதிகமாகத் தின்று விட்டபடியால் அவன் வயிறு ஒரு தினுசாக வலித்தது. அவன் எழுந்திருக்கும் போதே வயிற்றைத் தடவிக்கொண்டே எழுந்து வந்து கொல்லைப்புறத்தில் நின்று சோம்பல் முறித்துக் கொண்டான். அங்கே அவன் தாயார் வெளியில் திறந்த முற்றத்தின் நடுவில் பளிச்சென்று கோலம் போட்டு அழ

காகச் செம்மண் இட்டு, அதன் மத்தியில் பசும் மஞ்சள் செடியின் இலைகளை அமைத்து சிகப்பு, மஞ்சள், வெள்ளை நிறச் சாதப் பிடிகளை வைத்துப் படைத்துக் கொண்டு இருந்தாள். அவன் தாயாருடன் அடுத்த வீட்டு மாமியும் இருந்தாள். இருவரும் ஏதோ "காக்கைப் பிடிவைத்தோம் காக்காய்க் கெலாம் கல்யாணம்" என்று கூறிக் கொண்டே கரும்பு, பழம், யாவற்றையும் படையல் செய்து ஆலத்தி சுற்றி விட்டு மறைவாக நின்றனர்.

சீனு ஆவலுடன் அவர்களைப்பார்த்தான். "காக்காய்க் கெல்லாம் கல்யாணம்" என்று அப்பெண் மணிகள் கூறியது அவன் செவியில் ரீங்காரமிட்டது.

'சலங்கை எங்கே இருக்கிறதோ தெரியவில்லையே?' என்று அவன் நெஞ்சம் தன் பறவை நண்பனைக் குறித்து எண்ணிற்று.

"அம்மா சர்க்கரைப் பொங்கல் வைக்கவில்லையா?" என்று கேட்டான் சீனு.

"என்னடா, தூக்கக் கலக்கம் நீங்கவில்லையா இன்னும்? சர்க்கரைப் பொங்கல் கண்ணுக்குத் தெரியவில்லை? போய்ப் பல் தேய்த்து, முகம், கை, கால் கழுவிக் கொண்டு வா. அங்கே நின்று கத்தாதே! வருகிற காக்காயும் ஓடிவிடும்." என்று தாய் கூறியதும் சீனு ஆச்சரியத்துடன் அம்மாவை நெருங்கினான்.

"காக்காய் எதற்கு வரவேண்டும்?" என்று கேட்டான் அவன்.

"அது தான் பழக்கம். காக்காய்க்காகப் படைத்து விட்டு அது எந்தப் பக்கம் வந்து எடுக்கும் என்று பார்க்கவேண்டும். கிழக்குப் புறமாகத் தான் எடுக்கும்" என்று விளக்கினுள் தாய்.

இதைக் கேட்கக் கேட்கச் சீனுவுக்கு மிகவும் வேடிக்கையாக இருந்தது. சிரித்துக் கொண்டே அவன் பல் துலக்கப் போனுன்.

அவனுடைய அம்மா அவசரமாக அவனே அழைப்பது கேட்டது.

"என்னம்மா, என்னேக் கோபித்துக் கொண்டாய், இப்பொழுது நீயே கத்துகிருயே?" என்று வினவியபடியே வெளியே வந்தான் சீனு.

"உன் சலங்கைக் காக்காய்தான் வந்து முதன் முதல் கிழக்குப் புறமாக அமர்ந்து சர்க்கரைப்பொங்கலே எடுத்தது—கூப்பிட்டேன். பார்க்க விருப்பமில்லாவிட்டால் போயேன்" என்ருள் அவன் அம்மா!

"ஆ! சலங்கைக் காக்காயா? என் சலங்கையா!" என்று ஒரு தாவு தாவி அவன் முற்றத்தை அடைந்தான். அங்கு ஒரு திட்டின் மீது காக்காய் தலேயைச் சாய்த்து ஒற்றைக் கண்பார்வை பார்த்துக்கொண்டு நின்றது. அதன் காலில் முன்பு அவன் கட்டி விட்ட ஒற்றைச் சலங்கை இருந்தது. சீனுவின் நெஞ்சு விம்மிற்று.

"சீனு, நான் இனி இங்கே வருவதற்கில்லே. எங்கள் கூட்டத்தினரோடு யாத்திரை போகப்

போகிறேன். வடக்கே எங்கேயோ திருநாளாம். உன்னிடம் விடை பெற்றுக் கொள்ள வந்தேன்.''



நண்பனை விட்டுப் பிரிய வேண்டுமே என்று வருத்தத்தில் சீனு மூழ்கி கிடப்பதற்குள் சலங்கைக் காக்காய் தன் கால் கிண் கிணிக்கப் பறந்து மறைந்தது. ஆகாய வெளியையே நோக்கிக் கொண்டு நின்ருன் அவன்.

அவனுடைய தகப்பனர் அருகில் வந்து பேசுவதுகூட அவனுக்குச் சிறிது நேரம் வரை தெரியவே இல்லே.

"என்னடா சீனு, திக் பிரமை பிடித்து நிற்கிருயே? உனக்காக ஒரு பரிசு வந்திருக்கிறதே?''

"யார் அனுப்பியிருக்கிருர்கள், அப்பா?''

"உன் மாமா தான். ஒரு மைனவைக் கூண்டுடன் அனுப்பி யிருக்கிருன்'' என்று உற்சாகமாகப் பேசினர் அவர்.

"வேண்டாம், அப்பா! பட்சிகளைக் கூண்டில் அடைத்தாலே எனக்குப் பிடிப்பதில்லை. திறந்து விட்டு விடுங்கள். பாவம், பறந்து போகட்டும்" என்றான் சீனு.

"நீ வந்து பார்த்து விட்டுச் சொல்லேன். அழகாகப் பேசக்கூடப் பேசுகிறது. சொல்லிக் கொடுத்து இருக்கிறார்கள் யாரோ."



தகப்பனார் இவ்வளவு சொன்னபிறகு எப்படித் தட்டுவது என்று அஞ்சினவனைச் சீனு தந்தையைப் பின் பற்றி வெளிப் பக்கம் சென்றான். அங்கு கூண்டில் தெய்வமே என்று அந்தப் புது மைனா உட்கார்ந்து இருந்தது. சீனுவுக்கு அதைக் காணவே என்னவோ பரிதாபமாக இருந்தது.

"வணக்கம் வாருங்கள்—காபி சாப்பிடுகிறீர்களா?" என்று விசாரித்தது மைனா.

சீனுவுக்குச் சிரிப்பு வந்து விட்டது. தான் அதை உபசரிப்பது போக, அது தன்னை விசாரிப்பது அவனுக்கு மிகவும் வேடிக்கையாக இருந்தது. மேலும் அதன் குரலும் மிகவும் தமாஷாக இருந்தது. மனிதர்களைப் போலவே பேசவேண்டும் என்ற ஆவலில் அது வார்த்தைகளைத் தெரிந்துகொண்டு இருந்தது. ஆனால் குரலின் அமைப்பும், பேசும் விதமும் ஏதோ இயந்திரம் பேசுவது போல தகரக்குரலாக இருந்தன.

"ஏன் நீ அழகாகப் பறவை மொழியிலேயே பேசலாமே? மனிதனைப் போல வேடம் போட்டுக் கொச்சையாக உளறுவதைவிட அது மேலல்லவா? என்று மெதுவாகக் கேட்டான் சீனு.

மைனாவுக்கு ஆச்சரியம் போலும். ஒரு மனிதப் பையன் தன்னைக் கண்டு தன் மொழியில் பேசுவதா என்ற வியப்பில் அதன் முதுகு மயிரெல்லாம் குத்திட்டு நின்றது.

சீனு முக மலர்ச்சியோடு அந்தப் பறவையுடன் கொஞ்சுவதைப் பார்த்துத் திருப்தியுற்றவராக அவன் தந்தை உள்ளே போய் விட்டார். சீனு மைனாவுடன் பேச ஆரம்பித்தான்.

"நீ பேசுகிறாயே—கூடவே ஒருவர் வந்து ஒவ்வொரு சொல்லை விளக்க வேண்டியிருக்கிறது. அதைவிட உன் தாய் மொழியில் பேசினால்.......''

"நீ ஒருவன்தான் இப்படிப் பேசிக் கேட்டிருக்கிறேனே தவிர இதுவரை என் இனத்தினரை எல்லோரும் கூண்டில் அடைத்து பேச்சுச் சொல்லிக்

கொடுத்துத்தான் இன்புறுகிறார்கள். அதிலும் என் அண்ணன் தம்பிகளைவிட நான் மிகவும் நன்றாகப் பேசுவதாகத்தான் பெயர் எடுத்திருக்கிறேன்" என்று மைனா கூறும்போது அதன் குரலில் ஏமாற்றம், கோபம், யாவும் தொனிப்பதைக் கண்டான் சீனு.

"உன்னை நான் இகழ்ந்து பேசி விட வில்லை. அதற்குள் உனக்கென்ன கோவம்? சாதாரணமாகச் சொன்னேன். உன் பறவை மொழியில் அழகும் கச்சிதமும்......."

மைனாவுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. அது கிலீக், கிலீக், கீச், கீச் என்று ஆர்ப்பரிக்கத் தொடங்கி விட்டது.

சீனு அதையே பார்த்துக் கொண்டு நின்றான். தலைமீது சிறிய தலைப்பாகை வைத்தது போல நல்ல கறுப்பில் சிறகுகள் இருந்தன. உடல் எல்லாம் கருமையும் கடுமை தோய்ந்த மண் நிறமுமாக, பார்க்க ஒருவித கவர்ச்சியுடன் இருந்தது. இரு தொடைகளும் வாலின் அடிப்பாகமும் வெண்மையாக இருந்தன. கருத்த நிறங்களுடன் கூடிய இந்தப் பறவை சீனுவுக்கு மிகவும் பிடித்தது. அவன் உடனே கூண்டின் கதவைத் திறந்து விட்டுவிட்டான். மைனா ஒன்றும் புரியாமல் சிறிது நேரம் இருந்து பிறகு ஆனந்தமாகப் பாட்டுப் பாடிக் கொண்டே அரச மரத்தை நோக்கிப் பறந்து மறைந்து விட்டது. சீனு அதைத் துரத்திக் கொண்டே போய் அழைத்தான். மைனா வந்தது.

பிறகு மீண்டும் சட்டென்று தன் சிறகை விரித்துக் கொண்டு அருகே இருந்த ஒரு மாதுளம் மரத்தின் பக்கமாகப் பறக்கலாயிற்று. சீனு அதையே பார்த்தான். விசிறிபோல விரித்துக் கொண்டு அது பறந்து போகும்போது தோகையின் நுனியில் வெண்மையும், இரண்டு இறகுகளில் வெண்மையும் முத்தங்கி சேவை போல அழகு தந்தது.

சீனு ஒன்றும் பேசாமல் அதையே பார்த்துக் கொண்டு நின்ருன். மைனு மீண்டும் தரைக்குப் பறந்து வந்து அமர்ந்தது. கீசி, கீசீ, சர், சர், கீகாக், கொக், என்று என்னவோ சொல்லிற்று. சீனுவுக்குச் சிரிப்புத்தான் வந்தது. கடைசியாக கொக், கொக் என்று கூவும் போது, அது தலையைச் சாய்த்துச் சாய்த்து அபிநயம் பிடிப்பது மிகவும் வேடிக்கையாக இருந்தது. ஆனல் அவன் சிரிக்கவில்லை. சிரித்தால் ஓடிவிடுமோ என்று அஞ்சி அவன் பேசாமல் இருந்தான்.

மைனுவும் சீனுவை விடுவதாக இல்லை போலும் "சார். சார், உனக்குக் கோவமா என்மீது? பேசவே மாட்டேன் என்கிருயே?" என்று அருகில் வந்து அது கேட்டதும் சீனு ஆச்சரியத்தில் ஆழ்ந்து விட்டான்.

"எனக்கு என்ன கோபம்? நீ தான் என்னுடன் பேசுவாயோ மாட்டாயோ என்று யோசித்துக் கொண்டிருந்தேன்" என்ருன் சீனு.

"நான் ஏன் பேசாமல் போகிறேன்? அழகு தான்! சலங்கைக் காக்காயின் நண்பர்கள் யாவரும் என் நண்பர்கள் தான்."

“சலங்கையைப் பிடிக்காதவர்கள்கூட இருக்க முடியுமா? அவன் எனக்கு மிகவும் சிநேகம்'' என்றான் சீனு, உணர்ச்சியுடன்.

“அநேகமாக எங்கள் பழக்க வழக்கமும் காக்காய்களின் பழக்க வழக்கமும் ஒன்றாகத்தான் இருக்கும். அதனால் ஒரு பிடிப்பு எங்களுக்குள்'' என்று மைனா கூறிவிட்டுத் தரையில் எதையோ கொத்த ஆரம்பித்தது.

“நீ நன்றாகப் பாடுவாயோ?'' என்று சீனு கேட்டான்.

கொஞ்சம் பெருமையாக நிமிர்ந்து நின்றது மைனா. சிறிது நேரம் கம்பீரமாக இருந்து விட்டு பிறகு தான் மெதுவாகப் பேசியது. “அப்படித்தான் சொல்வார்கள். எந்தப் பேச்சு, பாட்டு—எது, இருந்தாலும் சீக்கிரம் கற்றுக் கொண்டு விடுவேன். எந்த மொழியும் எனக்குப் பிரமாதமில்லை.''

“எங்கே, ஒரு பாட்டுப் பாடு, பார்க்கலாம்'' என்றான் சீனு.

அப்பொழுது தான் காலையில் ரேடியோவில் கேட்ட ஒருபாட்டு ஒன்றை விட்டு விட்டுப் பாடிக் காட்டிற்று மைனா. சீனுவுக்கு ஒரே ஆச்சரியமாகி விட்டது.

“அடே, பெரிய ஆளாக இருக்கிறாயே நீ! நீ மிடுக்குப் பண்ணிக் கொள்வது சரிதான்''; என்றான் சீனு.

"நான் என்ன மிடுக்குப் பண்ணிக் கொள்கி றேன்! தினம் சாதாரணமாக வருகிறதே வீட்டு மைனு—அதை விடவா?"

"நீ மட்டும் சாதா மைனு இல்லை யாக்கும்?"

"ஏனே! நான் ஏன் சாதா மைனுவாவேனும்! நான் ஜாதிமைனு. உன் சாதா மைனுவுக்கு என்னைப் போல கொண்டையும் கிடையாது. ஒன்றும் கிடை யாது. திருப்பதிமொட்டை மாதிரி மழ மழ வென்று இருக்கும் அதன் தலை. சும்மா அதை மறைத்துக் கொள்வதற்காகக் கறுப்பாக இருக்கும்—அவ்வ ளவு தான்" என்று ஏளனமாகப் பேசியது மைனு.

"உன் இனத்தை நீயே தாழ்த்திப் பேசலாமா?" என்று கேட்டான் சீனு.

"தாழ்த்தியும் பேசவில்லை, உசத்தியும் பேச வில்லை. பழக்க வழக்கத்தினுல் உயர்ந்தவன் நான் என்று அறியாமல் பேசுகிருயே நீ?"

"பழக்க வழக்கங்கள், குணம், ஆற்றல் இதில் உயர்ந்தவனை உயர்ந்தவன் என்று நான் ஒத்துக் கொள்கிறேன். நீ அதை யெல்லாம் சொல்லாமல் உன் தலைக் கொண்டையைப் பற்றிப் பெருமைப் பட்டுக் கொள்கிருயே?"

மைனுவுக்குச் சீனுவின் பேச்சில் உண்மை இருப்பதாகத் தோன்றியிருக்க வேண்டும். அதனுல் சட்டென்று அதன் முகம்மாறி விட்டது.

"நான் சொன்னேன் என்று உனக்கு வருத்த மாகி விட்டதா, என்ன?" என்று கேட்டான் சீனு.

"அப்படி ஒன்றும் இல்லை. நீ சொன்ன வார்த்தை சரிதான். பிறந்த இனத்தைக் காட்டிக் கொடுப்பது மிகவும் தப்பாயிற்றே!''

"கிடக்கிறது போ, வருத்தப் படாதே!''

இதற்குள் அதே போன்ற ஜாதி மைனு இரண்டு வந்து அதன் அருகில் வந்து அமர்ந்து, பூமியில் படிந்திருந்த சரகுக் குப்பையில் ஏதோ தீனி தேடித் தின்றன.

"உங்கள் இனத்தில் நிறைய ஜாதிகள் இருக் கின்றனவோ?'' என்று கேட்டான் சீனு.

"நான்கு, ஐந்து ஜாதிகள் இருக்கின்றன. ஒவ் வொரு பிரிவினருக்கும் ஒரு தோற்றம் உண்டு.''

"சொல்லேன் கேட்போம்'' என்று கூறிவிட்டுச் சீனு தன் குறிப்பு நோட்டுப் புத்தகத்தைத் தூக்கிக் கொண்டு வந்தான்.

"என்ன நீ போலீஸ்காரனு என்ன? புத்தகத் தைத் தூக்கிக் கொண்டு வந்து விட்டாயே?'' என்று திடுக்கிட்டமாதிரி கேட்டது மைனு.

"ஏன் பயப்படுகிறுய்?''

"பயம் என்று ஒன்றுமில்லை. ஆனாலும் நாங்கள் மனிதர்களின் சமூகத்தை விரும்புவது மில்லை, வெறுப்பதும் இல்லை.''

"சாதாரண மைனு, அதுதான் வீட்டு மைனு, மனித சமூகத்தை விரும்புகிறதா?''

"ஆமாம். எங்கே மனிதன் இருக்கிருனே, அங்கெல்லாம் அது இருக்கும். அது பெரிய நகரமாக இருந்தாலும் சரி, நாட்டிலே ஒரு சிறு கிராமமாக இருந்தாலும் சரி, மனிதன் இருந்தால் அதுவும் அங்கே இருக்கும்."

"ஆனல் நீ தான் வீட்டில் வளரும் மைன, உன்னைத்தானே கூண்டில் வைத்து யாவரும் வளர்க்கிருர்கள். அந்த மைன......"

"நான் காட்டு மைன, அது நாட்டு மைன என்று வேண்டுமானல் சொல்லிக் கொள்ளேன்."

"அது தான் பொருத்தமாக இருக்கும்."

"எத்தனை நாட்களாக நீ கூண்டில் இருக்கிருய்? உன் குடும்பத்தினர் எல்லாம் எங்கே?" என்று சீனு மீண்டும் பேசினன்.

மைன தன் குடும்பத்தினரை நினைத்துக் கொண்டு விட்டது போலும். சோகமாகச் சிறிது நேரம் உட்கார்ந்து இருந்தது.

"சீனு, அவர்களைப் பற்றி ஏன் கேட்டு என் துக்கத்தைக் கிளப்பி விட்டாய்? அவர்கள் எங்கு இருக்கிருர்களோ? எவ்வளவு அழகான வீடு கட்டியிருந்தேன் தெரியுமா?"

"எதனல் கட்டுவாய்?" என்று சீனு கேட்டான்.

"அழகாகக் கட்டுவேன் என்றுலும் சில பறவைகளைப்போல அதுவே கலையாகச் செய்பவன் இல்லை நான். ஆனல் வசிப்பதற்கு மிகவும் இதமாக, மெத்தென்று இருக்கும்."

"மரப் பொந்தில் கட்டுவாயா, அல்லது காக்காய் மாதிரி கிளையில் கட்டுவாயா?" என்று சீனு ஆவலுடன் கேட்டான்.

"பூமியிலிருந்து சுமார் பதினைந்து, இருபதடி உயரத்தில் மரப் பொந்தில் கட்டுவோம். சில பேர் எங்களுக்காகப் பெட்டிகள்கூட அமைத்து வைத்திருப்பார்கள்."

"மனிதர்கள் எவ்வளவு நல்லவர்கள் பார்த்தாயா? அவர்களை விரும்புவதுமில்லை, வெறுப்பதுமில்லை என்று பற்றில்லாமல் பேசுகிறாயே?" என்று சீனு அதைச் சீண்டி வேடிக்கை பார்த்தான்.

"மிகவும் நல்லவர்கள் தாம் நீங்கள்! ஆனந்தமாக, சுதந்தரமாகத் திரியும் எங்களைப் பிடித்துக் கூண்டில் அடைத்து உங்கள் விருப்பப்படி ஆட்டுவித்து, பாடவைத்து இம்சை செய்கிறீர்களே!"

"உன் இனிமையான குரலில் மனத்தைப் பறிகொடுத்து விடுவதனால் தானே அப்படிச் செய்கிறோம்," என்றான் சீனு, விடாப்பிடியாக.

"போதும், போதும், பேசாதே. ஆனால் உன்னிடம் எனக்கு அன்புதான். நீ தானே எனக்கு விடுதலை அளித்தாய்?"

"போகட்டும், உன் கோபத்தைப் பார்த்து நான் பயந்தே விட்டேன்."

"நான் சற்று தோப்புக்குள் பறந்து பார்த்து விட்டு வருகிறேன். என் இனத்தவர் யாராவது

இருக்கிருர்களா என்று தெரியும். பிறகு வந்து பேசுகிறேன்'' என்றது மைஞ.

''கட்டாயம் வரவேண்டும். நான் உன்னை ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டே இருப்பேன்'' என்ருன் சீனு.

''கட்டாயம் வருவேன், சீனு. நீ எனக்கு நண்பஞகி விட்டாயே? கூண்டை மட்டும் திறந்து வை. எப்பொழுது வேண்டுமோ அப்பொழுது வந்தால் இருக்க ஒரு நல்ல இடமாகும்.''

''ஐயோ, மீண்டும் ஏன் கூண்டில் அமரவேண்டும். என் மேஜைமீது வந்து இரேன்'' என்ருன் சீனு.

''வேண்டாம். கூண்டுதான் நன்ருக இருக்கிறது,'' என்று பிடிவாதம் பிடித்தது மைஞ.

சீனு அத்துடன் ஒப்புக்கொண்டு விட்டான். அது பறந்து ஓடி விட்டது. 'சொன்னபடி திரும்பி வருமா, வராதா?' என்ற கேள்வி சீனுவின் உள்ளத்தைக் குடைந்தபடியே இருந்தது. அவன் மைஞ சென்ற திக்கையே நோக்கிக் கொண்டு நின்ருன்.

''சீனு, சீனு, எங்கேடா போய் விட்டாய்? இதற்குத்தான் நான் சொல்கிறேன்—அவனுக்கு பறவை வாங்கித் தரக் கூடாது என்று'' என்று அவன் தாயார் சத்தம் போடுவது கேட்டுச் சீனு உள்ளே வந்தான். ''ஏன் அம்மா?'' என்று மெதுவாகக் கேட்டான்.

''காலையில் எழுந்து எனக்கு ஆயிரம் வேலைகள் காத்துக்கொண்டு இருக்கின்றன. நீ காபி சாப்பிட

வில்லை. என்ன மைனுவோ, என்ன தொல்லையோ!' என்றுள் தாய்.

"இல்லையம்மா, நேற்று பொங்கலும், வடையும் நிறையத் தின்று விட்டேன் போல இருக்கிறது. வயிறு லேசாக வலிக்கிறது அம்மா" என்றுன் சீனு.

"சரி, பட்டினி போடு இன்றைக்கு. தானே சரியாகி விடும்" என்றுள் தாய்.

அப்பொழுது அவனுடைய தாய் எதற்கோ கமகமவென்று தாளிதம் செய்து கொண்டிருந்தாள். உடனே சீனு மூக்கை ஒரு இழுப்பு இழுத்தான். உடனே செல்லம் கொஞ்சும் பாவனையில் சிணுங்கலாகப் பேசினுன். "போ, அம்மா. இன்னிக்குத்தான் நீ எல்லாம் பண்ணுவாய் புளியஞ்சாதம் கலக்கப் போகிருயா?" என்று ஏக்கத்தோடு கேட்டான் அவன்.

அவனுடைய தாயார் வாய்விட்டுச் சிரித்து விட்டாள்" "ஒரு நாள் பட்டினி கிடந்தால் என்னவாம்? நான் இன்றைக்குச் செய்ய வேண்டியவைகளை உனக்காக நிறுத்த முடியுமா? புளியஞ்சாதம் மட்டுமா? தயிர்சாதம், தேங்காய்ச் சாதம் எல்லாம் கலந்து, வடாம், வற்றல் எல்லாம் வறுத்து எல்லாம் தான் செய்ய போகிறேன்" என்றுள் தாய்.

சீனுவின் முகம் சுண்டி விட்டது. "போ' அம்மா, போ, அம்மா!" என்று என்னவோ முணு முணுத்தபடியே அவன் வாசல் பக்கம் சென்று விட்டான்.

"சீனு, சீனு" என்று அவன் தாய் அழைப்பது கேட்டு அவன் சுளித்த முகமும் தானுமாக மீண்டும் சமயலறையில் வந்து நின்ருன்.

"இந்தா ஜன்னலில் ஒரு புது கொட்டாங்கச்சியில் மஞ்சள் பொடி கலந்த தண்ணீர் வைத்திருக்கிறேன். அதை மைனுவின் கூண்டில் கொண்டு வை. அது ஆகாரம் உண்ணும் முன்பு குளித்து விட்டுத் தான் உண்ணும்" என்ருள் தாய்.

"உண்மையா அம்மா?" என்று அவன் மெதுவாக அருகில் வந்து கேட்டான்.

"ஆமாமடா, உன் மாமா வந்தாலும் கேட்டுப் பாரேன்" என்ருள் தாய்.

"எப்படி அம்மா, மைனுவைப் பிடிப்பார்கள்?.'

"மூங்கிலில் ஒரு வில் மாதிரி செய்து அதில் நிறைய கோந்து தடவி விட்டு முட்டைப் பொரி, கடலே எல்லாம் தூவி வைப்பார்களாம். மைனு அதைப் பார்த்து பருப்பைக் கொத்த வரும்போது அந்த வில்லில் கால் ஒட்டிக்கொண்டு விடுமாம் உடனே போய் பிடித்து விடுவார்களாம்."

"போ, அம்மா, நான் நம்பவில்லே. மைனு எவ்வளவு புத்திசாலியாக இருக்கிறது! இவ்வளவு சுலபமாக ஏமாந்து விடு மாக்கும்?" என்ருன் சீனு

"நீ நம்பாவிட்டால் போயேன்—உன் தாத்தா என்னிடம் அப்படித் தான் சொல்லியிருக்கிருர்."

சீனு தன் அம்மாவின் பேச்சை அசை போட்டபடியே வாசல் பக்கம் வந்தான்.

"சீனு, உன் புது நண்பன் எங்கே?" என்று கேட்டபடியே தாழ்வாரத்து ஓரத்தில் சலங்கைக் காக்காய் அவனுக்காகக் காத்துக் கொண்டு அமர்ந்திருந்தது.

"சலங்கை! அப்பாடா! வந்தாயா? நீ எங்கே போய் விட்டாயோ?" என்று சீனு தன்நண்பனை ஆசையோடு வரவேற்ருன்.

"எங்கள் யாத்திரை சற்று தள்ளிப் போய் விட்டது. அதற்குள் உன்னிடம் கொஞ்சம் பேசலாமே என்று வந்தேன். உன்புது நண்பன் மைனு எங்கே" என்றுகேட்டது காக்கை.

"காட்டுக்குள்ளே பறந்து பார்த்து விட்டு வருகிறேன் என்றது."

"அங்கே தன் உறவினர்களை எல்லாம் பார்த்து விட்டது. பிரமாதமாக ஆர்ப்பரித்துக் கொண்டு கிடக்கிறது" என்றது சலங்கை.

"நீ பார்த்தாயா? அத்துடன் பேசினுயா?" என்று ஆவலுடன் கேட்டான் சீனு.

"பேசி விட்டுத்தான் வந்தேன். உன்னை அங்கு அழைத்துச் சென்று அவர்களை எல்லாம் உனக்குக் காட்டவேண்டுமாம். சொல்லிக் கொண்டிருந்தது,"

"சலங்கை, வருகிருயா? இப்பொழுதே போய்ப் பார்ப்போம்?"

"வா, வா" என்று கூப்பிட்டுக்கொண்டே சலங்கைக் காக்காய் வேகமாகப் பறந்து போய்விட்டது. சீனு அது சென்ற வழியை அடையாளம் பிடித்துக்

கொண்டு போவதற்குள் போதும் போதும் என்று ஆகிவிட்டது. மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க சிறு தொந்தி குலுங்க அவன் ஓடி வீட்டின் பின்னால்



இருந்த தோப்புக்குள் நுழைந்து ஒரு மரத்தின்மீது சாய்ந்து சற்று ஓய்வு எடுத்துக் கொள்ளப் பார்த்தான்.

"என்ன, சீனு,? ரொம்பவும் களைத்து விட்டாயா?" என்று கேலியாகக் கேட்டது காக்காய்.

அப்பொழுது தான் சீனுவுக்குக் கோபம் பொத்துக்கொண்டு வந்தது. அவன் ஒரு முறைமுறைத்தான். 'போ, சலங்கை, என்னால்ஓடவேமுடியவில்லை. இப்படித்தான் அலைய வைப்பதாக்கும்." என்று அவன் மிகவும் சண்டை பிடித்தான்.

சலங்கை சிரித்தது.

"சிரிக்காதே! எனக்கு கோபம் பற்றிக்கொண்டு வருகிறது" என்று சீறி விழுந்தான் சீனு.

காக்காய்க்கு என்னவோ மகிழ்ச்சி தாங்க முடியவில்லை போலும். "கர், கர்" என்று ஆர்ப்பரித்துக் கொண்டு மரங்களின் உச்சிவரை பறந்து விட்டு மீண்டும் சீனுவின் அருகில் வந்தது.

சீனு முகங்கொடுத்துப் பேசவே இல்லை.

"சீனு, என் மேலே அனாவசியமாகக் கோபித்துக் கொள்கிறாயே? நீ இவ்வளவு ஓடா விட்டால் ஜீரணமாகுமா? இன்னிக்குக் கலந்த சாதமெல்லாம் சாப்பிட வேண்டாமா?" என்று அவனை ஆறுதல் படுத்தியது காகம்.

சீனுவுக்கு உடனே கோபம் தெளிந்து விட்டது. தன்னை ஓடவைத்தது கூட நண்பனின் அன்புச் செயல்தான் என்று தோன்றின பிறகு அவனுக்குச் சலங்கை மீதுதுளிக் கோபங்கூட இல்லை.

"மைனாவைப் பார்த்தாயா, சீனு?" என்று கேட்டது சலங்கை.

"இல்லையே! இன்றும் எங்குமே கண்ணில் படவில்லையே?"

"என்னோடு வா."

"மறுபடியும் என்னை ஓடவைத்தால் உன்னை என்ன செய்வேன், பார்."

"ஓடவைத்தால் என்னவாம், தொந்திதான் கொஞ்சம் குறையட்டுமே."

சீனு முறைத்துப் பார்த்தானே தவிர, அங்கு சலங்கைக் காக்காய் இருந்தால் தானே? அவன் அதைத் தேடிக்கொண்டு பின்னாலேயே நடந்து சென்

ருன். சற்று தூரத்தில் ஓர் இலவம் பஞ்சு மரத்தின் அருகில் சலங்கை தரையில் தத்தித் தத்தி, எதையோ கொத்தித் தின்பது தெரிந்தது. ஒற்றைச் சலங்கையின் கிணிக், கிணிக் என்ற சத்தம் வேறு கேட்டது.

"ஏ, சலங்கை! மைனுவைக்காட்டுகிறேன் என்று கூப்பிட்டுவிட்டுப் பொருக்கித் தின்ன உட்கார்ந்து விட்டாயா?" என்று கடிந்தான் அவன்.

"மேலே மரத்தைப் பார்த்து விட்டுப் பேசு" என்றது அது.

அப்பொழுது தான் சீனு நிமிர்ந்து நோக்கினான். இதுவரை கவனிக்காது இருந்த காட்சி கண்களில் நிறைந்தது. அங்கு இருந்த பேரிரைச்சல் அவன் செவிகளை நிரப்பியது.

இலவமரத்தின் கிளைகளில் அலங்காரம் செய்யப்பட்ட ரங்க ராட்டினம் போல இலைகளே இன்றி பூக்களோடு நின்றது மரம். அதில் கணக்கற்ற மைனுக்கள் கூடிக் கத்தி, ஆர்ப்பரித்து, பூக்களைக் கொத்துவதும், தரையில் பூச்சிகளை, புழுக்களைத் தேடுவதுமாக இருந்தன.

மைனு சீனுவைக் கண்டதும் தன் இனத்தினரை விட்டு விட்டு அவனிடம் வந்து அவன் தோளில் அமர்ந்து கொண்டது.

"மைனு, உன்னைத் தேடித்தான் வந்தேன்" என்றான் சீனு.

"வாயேன், எங்கள் உறவினர்களைக் காட்டுகிறேன்" என்றது மைனு.

"இருக்கட்டும். முதலில் உங்கள் வீடு எப்படியிருக்கும் காட்டு" என்ருன் சீனு.

"மரம் ஏறுவாயா?"

"நன்ருகக் கேட்டாய் ஒரு கேள்வி! பறவைகளின் சிநேகிதனுக ஆனபிறகு அவன் மரம் ஏறத் தெரியாமல் இருப்பானு?" என்று சலங்கைக் காக்காய் அவர்கள் மத்தியில் குறுக்கிட்டது.

"அப்படியாளுல் வா" என்று அருகே இருந்த பெரிய மரம் ஒன்றின் கிளைக்குப் பறந்தது மைனு. சீனு மெதுவாக ஏறி அதன் அருகே சென்ற பிறகு தரையை எட்டிப் பார்த்தான். உயர்ந்த மாடி ஒன்றை ஏறின மாதிரி இருந்தது. சுமார் பதினைந்து அடி உயரத்துக்கு மேல் ஏறி விட்டான் அவன். அந்த உச்சியில் ஒரு பொந்தில் ஐந்து முட்டைகள் இருந்தன. கூடு அழகாகவோ தீர்மான மானதாகவோ கட்டப்படவில்லை. சுமாராக மெத்தென்ற பொருள்கள் பரப்பப்பட்டிருந்தன. முட்டைகளைப் பார்த்தான் சீனு. சுமார் முக்கால் அங்குல நீளத்தில் மெல்லிய பீங்கானில் செய்யப்பட்டது போல பளபளப்பாகவும், தொட்டால் கடினமாகவும், வழவழப்பாகவும் இருந்தன அம் முட்டைகள். உருவத்தில் சற்று நீண்ட கோளங்களாக இருந்தன. நிறமும் மிகவும் அழகாக இருந்தது. புது மாதிரி சில்குகளைப் போல நீலமா, வெள்ளையா என்ற இனம் சொல்லத் தெரியாத ஓர் அழகு நிறமும், பச்சைக்கும் நீலத்திற்கும் நடுமையான ஓர் எழில் நிறமும், அவன் மனசைக் கொள்ளை கொண்டன. அப்படியே

வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டு நின்ருன் அவன்.

"இவ்வளவு சீக்கிரம் கூடு கட்டுவதோ முட்டையிடுவதோ கிடையாது. சித்திரை வைகாசி போக வேண்டும். அதனுல் நீ முரைத்துப் பார்த்தால் திருஷ்டி வந்துவிடும் என்று நினைப்பார்கள். சீக்கிரம் இறங்கி வந்து விடு" என்றது மைனு.

"பின்னே எப்படி........?" என்று ஆரம்பித்தான் சீனு.

"உம்! வா, போகலாம். யாராவது சொந்தக்காரர்கள் பார்த்தால் ஏதாவது நினைத்துக் கொள்வார்கள்." என்று மைனு அவனை நிற்க விடாமல் நச்சரித்தது.

சீனு மனமில்லாமல் இறங்கி வந்தான்.

"சீனு, இயற்கை நியதிப் பிரகாரம்தான் எல்லாம் நடக்கின்றன. இருந்தாலும் சில சமயம் தவறி, முன் பின்னுக நடப்பதும் உண்டு. அப்படி நேர்ந்து விட்டால் நல்லபடியாக இருக்கவேண்டுமே என்று கவலைப் படுவார்கள் அல்லவா?"

சீனு ஒன்றுமே பதில் சொல்லவில்லை. அவன் மனம் அந்த முட்டைகளின் அழகையே நினைத்து நினைத்து மகிழ்ந்து கொண்டிருந்தது.

"உன்னைச் சீக்கிரம் அழைத்து வந்து விட்டேனே என்று உனக்கு வருத்தம் போலும்" என்றது மைனு.

சீனு அப்படி ஒன்றும் புரியாதவன் இல்லை. அவன் அம்மா கூடத்தான் அவனுக்குத் திருஷ்டி

பட்டு விடும் என்று எத்தனையோ நாள் கூடத்தைக் கொளுத்தி சுற்றிப் போட்டிருக்கிருள். அவன் சிந்தனையைக் கிளறிய விஷயம் வேறு. 'வீட்டு மைனு குறிப்பிட்ட பறவையை அவன் பார்த்தான். உடலெல்லாம் கருத்த பழுப்பு நிறம். ஏறத்தாழ தேன் நிறம், வயிற்றின் கீழ்ப்பாகத்தில் ஒரு வெண்மை. தோகையின் முனை நன்ருக வட்டமாகக் கத்தரித்து விட்டது போல கவின் பெற அமைந்திருந்தது. தோகையின் நுனியில் நல்ல கறுப்பு. மத்தியிலுள்ள இரண்டுசிறகு தவிர வெள்ளை சிறிதும் இருந்தது. மைனு பறந்து செல்லும்போது விசிறி போல அந்த வெள்ளை வட்டத்தைச் சுற்றிக் கறுப்புக்கரை போட்டது போல அமைப்பு மனத்தைக் கவர்ந்தது. மொத்தத்திலேயே மைனுவைப் பார்த்தால், அப்பொழுது ஒரு பொது மேடையில் தலைமை வகிக்கப் போக நிற்பது போலவும், மாப்பிள்ளை அழைப்பில் இருக்கும் மணமகனைப் போலவும் கச்சிதமாக, கவர்ச்சிகரமாக இருந்தது. சீனு தன் உடலையும் ஆடையையும் பார்த்துக் கொண்டான்.

"மைனு உனக்குக் கர்வம் ஏறிவிடக் கூடாதே என்று பார்க்கிறேன். ஆனுல், நீ மிகவும் அழகாக இருக்கிருய்? கனக் கச்சிதமாக மாப்பிள்ளை போல இருக்கிருயே?" என்ருன் சீனு.

"பேசும் மைனுக்களாகிய நாங்கள் காட்டு மைனுக்கள். அழகாக இருக்க மாட்டோம். இப்பொழுது காட்டினேனே வீட்டு மைனுக்கள்—அவர்கள் அழகு வாய்ந்தவர்கள். கவனித்துப்பார்.

அவர்கள் பழுப்பு நிறமாக இருப்பார்கள். நாங்கள் கறுப்பாக இருப்போம். எங்களில் சிலருக்குக் கொண்டை உண்டு. அவர்களுக்குக் கிடையாது. உண்மையில் அவர்கள் தாம் பெரிய அலுவலர்கள் மாதிரி நல்ல உடுப்பு அணிந்து மழ மழ வென்று கச்சிதமாக இருப்பார்கள்'' என்றது மைனு.

சீனு அங்கு கூடியிருந்த மைனு தினுசுகள் யாவற்றையும் கவனித்தான். அவை அனைத்தும் செயலில் ஒன்று பட்டன. சாயலில் வேறு பட்டன.

மீண்டும் அவைகளை அம்சம் அம்சமாகக் கவனித்தான் சீனு. கால் மஞ்சள் பூசினதுபோல பொன்னிறமாக இருந்தது. நல்ல கரும் பழுப்பில் சிறிது வெள்ளைப் பொட்டுடனும் சுற்றி மஞ்சள் வளையமும் அழகாக இருந்தன. இரண்டு, இரண்டு மைனுக்களாகக் கூடிக் கூடித் தத்தின.

''நீங்கள் தமிழ் நாட்டுப் பறவைகள் தாமே?'' என்று மிகச் சொந்தத்துடன் கேட்டான் சீனு.

"இல்லை, அப்பா. இந்தியா முழுவதும் இருக்கி றோம்.''

''காக்காய் மாதிரி நீங்களும் திருட்டுப்பிழைப்பு நடத்துவீர்களோ? என்று கேட்டு விட்டான் சீனு அவன் இதயம் ''திக், திக்'' என்று அடித்துக் கொண்டது. ஆனால் மைனு கோபித்துக் கொள்ள வில்லை. அது மெல்லச் சிரித்துக் கொண்டது.

"எங்கள் சாப்பாட்டு ருசி காக்காயைப் போல தான். நாங்கள் எதையும் தின்போம். ஆனால் காக் காய்க்கு இருக்கிற தாழ்வு மனப்பான்மை எங்

ளுக்கு கிடையாது. நம்மை யார் என்ன செய்துவிட முடியும்?'' என்று பேசியபோது மைனு பெரிய தன் மதிப்புடன் மிடுக்காக நின்றது.

''உன்னுல் மனிதர்களுக்குத் தொல்லே கிடையாது, அல்லவா?''

''என்ன தொல்லே! கிராமங்களில் வயல்களில் ஈசல், விட்டில் முதலிய நாசகாரப் பூச்சிகளே விரட்டுவோமே நாங்கள் தெரியுமா? அது பெரிய தொண்டல்லவா? மேலும் பாம்பு, கழுகு, கீரி முதலியவை வந்தால் நாங்கள் கூட்டத்தோடு சேர்ந்து போடும் கூப்பாட்டில் ஊரே விழித்துக் கொண்டு விடும். மனிதனுக்கு அது ஒரு நன்மை அல்லவா?''

அதன் தன்னம்பிக்கை சீனுவுக்கு மிகவும் பிடித்தது. அவன் அதை மெச்சிப் பேச எண்ணினுன். ஆனுல், மைனு தம்பதிகள் அவனேக் கவனிக்காமலேயே ஒன்றை ஒன்று இறகுகளே தம் அலகுகளால் கோதி விட்டுக் கொண்டு கர், கர், சர், சர் என்று கடுமையும் இனிமையும் கலந்த குரலில் பேசிக் கொண்டிருந்தன.

''நீங்கள் இலட்சிய தம்பதிகள் போலேயிருக்கிறது. உலகத்தையே மறந்து உங்களுக்குள்ளேயே பேசிக் கொள்கிறீர்களே?'' என்று நையாண்டி செய்தான் சீனு.

''ஆமாம், நாங்கள் ஜோடியாகத் தான் வாழ்வது. இரவில் மட்டும் எங்கள் கூட்டத்தோடு மரக் கிளேகளில் காகம், கிளி, மற்றுமுள்ள பறவைகளுடன் இருப்போம்'' என்றது ஆண் மைனு.

"காகங்களைப் போல நீங்களும் தான் சத்தம் போடுகிறீர்கள்" என்றான் சீனு.

"எங்கள் வழக்கம் உரக்கப் பேசுவது" என்றது மைனா. அது அதை ஒரு பெருமையாகப் பாவித்தது போலும்.

"எனக்கு நாழிகையாகி விட்டது. நான் போகி றேன்" என்று ஓடினான் சீனு.

வீட்டுக்குச் சென்று, சாப்பிட்டுவிட்டுப் பள்ளிக் கூடத்திற்கு ஓட வேண்டியிருந்தது. வாத்தியார் சீக்கிரமாக வரச் சொல்லியிருந்தார்.

"என்னடா, சீனு. பிரமாதமாகக் கேட்டு விட்டு சாப்பிடும்போது குருவியைப் போல கொரிக் கிறாயே?" என்றாள் தாய்.

மைனா தம்பதிகளின் நினைவு வந்தது, சீனுவுக்கு. "நானும் ஒரு பறவையாக இருந்தால் எப்படி இருக் கும்? ஆனந்தமாகப் பறக்கலாமே?" என்று நினைத்து ஏங்கியவனாக அவன் தன் தாயாருக்குக் கூடப் பதில் சொல்லாமல் பள்ளிக்குப் பறந்தோடினான்.

☆



## 3 குருவி தம்பதிகள்

"சிட்டுக் குருவிபோல் போய் விட்டு வரவேண்டும், ஹூம்!" என்று விரட்டினார் வாத்தியார்.

சீனுவும், நண்பன் கோபுவும் வேகமாக ஓடி விளையாட்டு மைதானத்தின் மறு கோடியிலிருந்த வாத்தியாரிடம் தங்கள் வாத்தியார் கொடுத்த கடிதத்தைக் கொடுத்து, பதில் வாங்கிக் கொண்டு மீண்டும் திரும்பினார்கள்.

இரைக்க இரைக்க ஓடி வந்த அவர்கள் இரு வரையும் ஒரு விஷயம் சட்டென்று நிறுத்திவிட்டது. அவர்கள் ஓடி வந்த வழியில் ஓர் இரேழியின் மத்தியில் குருவிக் கூண்டு ஒன்றுவிழுந்து கிடந்தது. சீனு சட்டென்று நின்று விட்டான். கூட்டிற்குள் நிதானமாகப் பார்த்தான். மூன்று முட்டைகள் காணப் பட்டன. சின்ன பாதாம் மிட்டாய் அளவு கூட இல்லை. அழகாக பெப்பர்மிண்ட் வகையைப் போல இலேசான சாம்பல் நிறத்தில் சாக்லேட்டுக்கும் சற்றே கருமையாக பூப்போல குட்டி குட்டி புள்ளிகள் போட்டிருந்தன.



"வாடா, சீனு வாத்தியார் நம்மைஉதைப்பார்" என்று அவசரப் படுத்தினன் கோபு.

"இருடா, பாவம். விழுந்து விட்டதேகூடு" என்று மிகவும் அங்கலாய்த்த சீனு மேலே நிமிர்ந்து சுற்றும் முற்றும் பார்த்தான் 'மேல் விட்டத்தின் ஒரு மூலையில் மின்சாரக் கம்பி வருவதற்காக அடிக்கப்பட்ட சட்டத்திற்கும் சுவருக்கும் மத்தியில் இருந்திருக்க வேண்டும் கூடு' என்று ஊகித்தான் சீனு. உடனே அங்கு மிங்கும் அலைந்ததில் ஒரு கிழிந்த அட்டைப் பெட்டி கிடைத்தது. அருகிலிருந்த ஒரு

பெஞ்சியின் மீது ஏறி அந்தப் பெட்டியை மூலையில் பதிவாக வைத்து விட்டு அவன் கோபுவை அழைத்து கூட்டை மெதுவாகத் தூக்கிக் கொடுக்கச் சொன்னான். அதை அந்த இடத்தில் வைத்த பிறகுதான் அவன் மனம் நிம்மதி அடைந்தது.

உடனே அவன் தன் வகுப்பிற்கு விரைந்தான். அவன் வாத்தியார் அவனையும் கோபுவையும் நிறுத்தி அதட்டினார். "ஏண்டா, நான் நீங்கள் இரண்டுபேரும் ஓடி வருவதை அப்பொழுதே பார்த்தேனே? இது வரை என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?'' என்று அவர் கோபிக்கவும், கோபு தான் தப்பித்துக் கொள்வதற்காகப் பேசினான்.

"சார், நான் அப்பொழுதே வந்திருப்பேன். சீனு தான் குருவிக் கூடு ஒன்று கீழே விழுந்து கிடந்தது என்று அதை மேலே வைப்பதில் முனைந்து விட்டான். அந்த சார் கொடுத்த கடிதம் அவன் சட்டைப் பையில்தான் இருந்தது'' என்றான் கோபு.

"உன்னைக் குருவிபோல ஓடச் சொன்னேனா; குருவிக்கு பணிவிடை செய்யச்சொன்னேனா'' என்று கேட்டார் வாத்தியார்.

சீனு ஒன்றும் பதில் சொல்லாமல் வணக்கமாக நின்றான்.

''சரி, உன் இடத்துக்குப் போ'' என்றார் சார்.

கோபுவும் அவனும் இடத்தில் போய் உட்கார்ந்தார்கள். வாத்தியார் சீனுவை அடிப்பார் என்றே

எல்லோரும் எதிர் பார்த்தார்கள். ஆனால் அவர் கடுமையாக முகத்தை வைத்துக் கொண்டாரே தவிர, வேறு ஒன்றும் செய்யவில்லை. எல்லோரும் பேசாமல் இருந்தனர். அப்பொழுது ஜன்னலில் இரண்டு குருவிகள் அமர்ந்து "டவிட், டவிட்" என்று என்னவோ வம்பு பேசின

வாத்தியார் குருவிகளைப் பார்த்து விட்டுச் சீனுவைக் குறிப்பாகப் பார்த்தார். "சீனு, உன்னைத் தேடி நன்றி சொல்லக் குருவி தம்பதிகள் வந்திருக்கிறார்கள் பார்" என்றார். உடனே வகுப்பே 'கொல்' என்று சிரித்தது. அந்தப் பெரிய ஓசையைக் கண்டு குருவி இரண்டும் ஓடி விட்டன.

"சரி, சிட்டுக் குருவியைப் பற்றி ஒரு கட்டுரை எழுதுங்கள்" என்று அவர்களுக்கு வேலை தந்து விட்டு வாத்தியார் நிறைய நோட்டு புத்தகங்களைத் திருத்த ஆரம்பித்தார்.

பிள்ளைகள் எல்லாரும் ஏதோ எழுத ஆரம்பித்தாலும் சீனுவை இடுப்பில் குத்துவதும், வாத்தியார் பார்க்காத சமயமாக அவன்மீது சிறு காகிதப் பந்துகள் செய்து போடுவதுமாக அவனைத் துன்புறுத்தி இன்புற்றார்கள், சீனு ஒன்றும் தோன்றாமல் பேனாவை வைத்துக்கொண்டு விழித்துக் கொண்டிருந்தான். அவனுக்கு அழுகைகூட வந்து விடும் போல இருந்தது. அப்பொழுது ஜன்னலுக்கு வெளியே குள்ளமான வேலிச் செடி ஒன்றின் மீது குருவிகள் வந்து அமர்ந்து கொண்டன. அவைகளின் மூக்கில் பஞ்சும் வைக்கோலும் இருந்தன. ஆண் குருவி அழகான, பெரிய இடத்துப் பிள்ளைபோல்

நேர்த்தியாக ஆடையணிந்தது போல தோன்றியது சீனுவுக்கு. தலையின் உச்சி நீற்றுப்போன நெருப்புச் சாம்பல் நிறம். இருகன்னங்களிலும் சாக்லெட்



நிறமாகப் பரவி, முதுகிலும் பின் கழுத்து எல்லாம் சாக்லெட் நிறத்தில் கறுப்புக் கோடிட்டபடி அழகாக இருந்தது. பின்புறம் சாம்பல் நிறம். தோகையோ சாக்லெட்டில் சற்று வெளுத்த நிறம். இரு இறக்கைகளும் சாக்லெட்டில் கருமையும் வெண்மையுமாக நடுவில் கறுப்புக் கோடுகளுடன் கல்யாண மாப்பிள்ளை போடும் புதுமாதிரிக் கம்பிளி சூட் மாதிரி இருந்தது. மூக்கிலிருந்து கண் வரை ஒரு கறுப்புக் கோடு, பக்கவாட்டில் ஒரு கறுப்புத் திட்டு, மிகுதி இடமெல்லாம் வெள்ளையாக இருந்தது.

சீனு அப்படியே தான் கண்டதை எழுதினான். பெண் குருவியைப் பார்த்தான். இவனுக்காகவே தானோ என்று எண்ணும்படி அதுவும் ஆடாமல் அசையாமல் அமர்ந்திருந்தது. சீனு அதைப் பார்ப்

பதும் எழுதுவதுமாக இருந்தான். ஆண் குருவியின் அழகு பெண் குருவிக்கு இருக்கவில்லை. கிளி முன்பு சொன்ன சொல் சீனுவுக்கு நினைவு வந்தது. "பெண் குருவி ஒருவித மண் நிறத்தில் இருக்கும். அதில் லேசான செம்மண் கீற்றுகளும், கறுப்புக் கீற்று களும் தென்படும். தோகையும் கருத்த பழுப்பும் ஓரத்தில் வெண்மை கலந்த பழுப்புமாக இருக்கும். இறக்கைகளோ செம்மண் நிறமும் வெண்மையுமாக இருக்கும். ஆண் குருவியின் அழகு பெண்ணுக்குக் கிடையாது. அடக்கமாக இருக்கும். பட்சியினத்தி லேயே ஆண் இருக்கும் அழகு பெண் இருப்ப தில்லை......" என்று ஆரம்பித்தான். கட்டுரை விரு விரு வென்று ஓட ஆரம்பித்தது.

யாருக்கும் கேட்காத ஒரு குரலில் சீனு குருவி யைப் பார்த்துக் கேள்விகள் கேட்டான். அதுவும் பதில் கூறியது.

"நாங்கள் உலகத்து முக்கிய நாடுகள் யாவற் றிலும் இருக்கிறோம். பாரத நாட்டிலும் பல இடத் தில் இருக்கிறோம். அங்கு இருக்கும் உறவினர்கள் நிறமெல்லாம் வேறு. எங்களைப்போல அழகாகவோ ஆண் என்றும் பெண் என்றும் வித்தியாசத்துடனோ இருக்க மாட்டாரகள். குவெட்டா, டார்ஜிலிங்கில் கூட இருக்கிறோம்."

சீனு அதை எழுதி முடித்ததும் அவை கூடு கட்டும் விசித்திரத்தைப் பற்றி எழுதினன். மூக்கு தூக்க முடியாத அளவு வைக்கோலும் நாலும் கொண்டு வந்து கிடைத்த மூலையில் வாய் அகன்ற கிண்ணம் போல்திணித்து, அதன் உள்புறம் பூராவும்

மெத்தென்று இறகுகளால் அமைத்துக் கட்டுவதை விவரித்தான். வீட்டில் தானிய மூட்டைகள், மாவு எல்லாவற்றிலும் மூக்கு மூக்காகத்தூக்கிக்கொண்டு போகும் விடா முயற்சியை வர்ணித்தான்.

சில சமயம் தோட்டங்களிலும் வயல்களிலும் விதைத்த விதையெல்லாம் தின்று உபத்திரவப் படுத்துவதைச் சீனு கவனித்திருக்கிறான். கிராம பகுதிகளில் மரங்களிலும் பூவும் காயும் பழமுமாக இருக்கும் சமயம் பார்த்து, அங்கு போய் அவற்றை உண்டு விட்டு வரும். சில சமயம் அவ்வாறு குருவி கள் வயல்களிலும் தோட்டங்களிலும் லூட்டி அடிப் பது நன்மையாகவும் இருப்பது உண்டு.

"உங்களால் மனிதனுக்கு உதவியே கிடையாது உபத்திரவம் தான்" என்று சீனு குருவியின் வாயைக் கிண்டினான். உடனே அவை இரண்டும் காச்சு மூச்சென்று சண்டைக்குக் கிளம்பி விட்டன.



"பூச்சி, புழு, மரவட்டை, மண்ணுளிப் பாம்பு— எல்லாவற்றையும் எடுத்து உங்கள் செடிகளையும்

பயிர்களையும் காப்பாற்றுகிறோமே? அதை நினைத்து நன்றி செலுத்தாமல் பேசுகிறாயே?'' என்று பெண் குருவி பறந்து வந்து சீனுவின் தோள்மீது அமர்ந்து அவன் காதைத் துளைத்து விட்டது தன் வசவுகளுடன். சீனு தலையை ஆட்டி அதை ஓட்டினான். "சரி, சரி, அப்புறம் வீட்டுக்கு வந்து என்னோடு சண்டை போடுவாயாம். இது வகுப்பாக்கும்'', என்றான்.

இதற்குள் எல்லாப் பையன்களுமாகச் சேர்ந்து, "சார் குருவி சீனுவுடன் பேசுகிறது சார்! அவன் கட்டுரைதான் முதலாக இருக்கிறது'' என்றார்கள்.

சீனு குருவியை ஓட்ட அவஸ்தைப் படுவதைக் கண்ட வாத்தியார் சிரித்தார். எல்லாப் பிள்ளைகளும் அதில் ஆர்ப்பாட்டமாகக் கலந்து கொண்டனர். சீனுவுக்கு மிகவும் சங்கடமாக இருந்தது கட்டுரைகளைக் கொடுக்க வேண்டிய நேரம் வந்ததும் மேஜைமீது வைத்துவிட்டு, மணி அடித்ததும் அடிக்காததுமாக வீட்டுக்கு ஓட்டம் பிடித்தான் அவன்.

கூடத்தில் மாட்டியிருந்த பெரிய கண்ணாடிமுன், அதன் சட்டத்தில் பிடித்துக் கொண்டபடி ஒட்டிக் கொண்டு தன் அழகைப் பார்த்தது ஆண் குருவி. பெண் குருவி மேல் விளிம்பில் அமர்ந்து தலை கீழாக குனிந்து பார்த்தது. கண்ணாடிக்குள் வேறு குருவி தெரிவதைப் பார்த்து மூக்கினால் குத்திக் குத்தி சண்டைதான் போட்டனவோ சகஜமாகத்தான் விளையாடினவோ தெரியாது. 'டொக்' 'டொக்' கென்று குத்தித் தீர்த்தன.

"சீனு, குருவியை ஓட்டக் கூடாதா? கண்ணாடியைக் குத்திக் குத்திப் பாதரச மெல்லாம் போய் விடுமே?'' என்றாள். சீனுவின் அம்மா.

சீனுவுக்கு அவைகளை ஓட்ட மனமுமில்லை, தைரியமுமில்லை. அவன் பேசாமல் பார்த்துக் கொண்டு நின்றான்.



"சீனு வந்து விட்டான்'' என்று கூறிக் கொண்டே பெண்குருவி அவனைப் பார்த்து வரவேற்றது. ஆண்குருவியும் அதுவும் வீடு முழுவதும் 'ட்ர்ப் ட்ர்ப்' என்று கத்தி ஆரவாரம் செய்து கும்மாளமடித்து விட்டு ஓடி விட்டன. சீனு அவைகளை ஆசையோடு நோக்கி வழி அனுப்பினான்.

"சீனு, கண்ணாடி மேலே ஒரு துணி போட்டு மூடுடா'' என்று குரல் கொடுத்தாள் தாய்.

"வேண்டாம், அம்மா! நீ குங்குமம் வைத்துக் கொள்ளும் பலகையில் உட்கார்ந்து ஆண் குருவி

சின்னக் கண்ணடியில் அழகு பார்ப்பதை பார்க்க வில்லையே நீ!"

"போடா பைத்தியம்! கண்ணடி கெட்டு விடும்" என்ருள் தாய்.

சீனு நல்ல துணி ஒன்றை எடுத்துக் கண்ண டியை மூடினன்.

"சிர்ப், ட்சிர்ப்" என்று கத்திக் கொண்டு குருவி தம்பதிகள் வந்து சேர்ந்தன.

"இந்த வீட்டில் கூடு கட்டி யிருப்பவர்களா நீங்கள்?" என்று விசாரித்தான் சீனு.

"ஆமாம், உனக்கு எப்படித் தெரியும்?" என்று பேச்சு கொடுத்தது பெண் குருவி.

ஒரு மூக்கு நிறைய முந்திரி பருப்பு எடுத்துக் கொண்டு ஓட்டம் பிடித்தது ஆண் குருவி.

முற்றும்

